# பகவத் பாதை

BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 7 | இதழ் 1 | மார்ச் 10, 2020 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 7 | Issue 1 | March 10th, 2020 | Annual Subscription Rs. 100/-

## நிகழ்வும் செயலும்
(Happening and Doing)





# பகவத் பாதை தமிழ் மாத இதழ்

"புற நிகழ்வுகள் நம் கைவசம் இல்லை. நாமாக செய்யும் செயல் மட்டுமே நம் கைவசம் உள்ளது.

அகத்தை பொறுத்தவரையிலும் 100% நம்மை மீறிய ஒன்று. ஆகவே அதனை இயற்கையின் செயலாகவே எடுத்துக்கொள்ள வேண்டும்.

அப்படி நாம் அதனை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்ளும் நிலையில்,

முரண்பட்டு இயங்கும் நம் மனதினுள்ளும் முரண்படாத ஒரு முழுமைத் தன்மை மலர்வடைகின்றது.

– ஸ்ரீ பகவத்

## ஸ்ரீபகவத் மிஷன் புக் ஸ்டால்

சென்னையிலிருந்து சேலம் செல்லும் பைபாஸ் சாலையில், மின்னாம்பள்ளி அருகில், மகேந்திரா இன்ஜினியரிங் காலேஜ்க்கு எதிரில், சின்ன கவுண்டா புரம் பிரிவு ரோட்டில் நமது **ஸ்ரீபகவத் மிஷன் புக் ஸ்டால்** அமைந்துள்ளது.

இங்கு ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் அனைத்து தமிழ், ஆங்கில நூல்கள் மற்றும் ஆடியோ வீடியோ குறுந்தகடுகள் (CD) கிடைக்கும்.

நமது அன்பர்கள் இதனைப் பயன்படுத்திக்கொள்வதோடு நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் தெரிவித்து அவர்களும் வாங்கி பயன்பெற உதவுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**ஸ்ரீபகவத் மிஷன்**, சேலம்.

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075


## சென்னையில் ஒரு நாள் ஞான முகாம்



| | |
|---|---|
| நாள் | **05.04.2020** ஞாயிறு |
| நேரம் | காலை 9.00 மணி முதல்<br>மாலை 6.00 மணி வரை |
| இடம் | **ICSA Programme Centre**<br>107, ஜீவன் ஜோதி ஹால், பாந்தியன் சாலை,<br>(எழும்பூர் அருங்காட்சியகத்திற்கு எதிரில்)<br>எழுப்பூர், சென்னை. |

செலவுப்பகிர்வு ரூ. 400/-

**விபரங்களுக்கு**

**+91 8838229095, +91 98843 48800, +91 96000 29023**





# நிகழ்வும் செயலும் (Happening and Doing)

- ஸ்ரீ பகவத்

திருச்சியிலிருக்கும் பொறியாளர் ஒருவர் சில தினங்களுக்கு முன் தொலைபேசியில் தொடர்பு கொண்டு பேசினார்.

"காற்றாலைக்கான உபகரணங்களை தயாரிக்கும் நிறுவனம் ஒன்றில் பொறியாளராக வேலை பார்க்கிறேன். பணியாளர்கள் அதிகம் என்ற நிலையில் என்னை வேலையிலிருந்து நிறுத்தி விட்டார்கள்...

"வேறு இடத்தில் வேலை தேடி வருகிறேன். என் மனது மிகுந்த பதட்டத்தில் இருக்கிறது. நான் பதற்றமாக இருப்பதால் வேலை கேட்டு போன் செய்யும் போது கூட எனது பதற்றம் வெளிப்பட்டு விடுகிறது. இதனால் புதிய வேலை கிடைப்பதிலும் சிக்கல் ஏற்பட்டு விடுகிறது...

"நான் எவ்வாறு செயல்பட வேண்டும் என்று தெரியவில்லை. எனது பதற்றத்தை எவ்வாறு நீக்குவது? எனது சூழ்நிலையை நான் எவ்வாறு எதிர்கொள்வது?"

அவரிடம் அது பற்றிப் பேசினோம்.

..."வேலை பிடிக்கவில்லை" என்று நீங்களே உங்களுடைய வேலையை நீங்களாக ராஜினாமா செய்து இருந்தால் அது நீங்களாக செய்துவிட்ட உங்களுடைய செயல்...

...நீங்களாக நீங்கள் உங்களுடைய வேலையை ராஜினமா செய்திருக்கவில்லை. ஆகவே அது உங்கள் செயல் அல்ல. ஆனாலும் அது உங்களுக்குத்தான் ஏற்பட்டுள்ளது. ஆகவே அது உங்களுக்கு நிகழ்ந்த செயல்...

... நிகழ்ந்த செயல் வேறு; நாமாக செய்த செயல் வேறு. நிகழ்ந்தது என்பது Happening. நாமாகச் செய்யும் செயல் என்பது Doing. Happening(H) நம்மையும் மீறி நடக்கிறது. Doing (D) என்பது நமது முயற்சியின் காரணமாக நடப்பது. நிகழ்ந்தது அனைத்தையும் happening ஆக – (H) ஆக எடுத்துக்கொள்ள வேண்டும்...

... நிகழ்ந்தவை – H அனைத்தும் இறைவன் செயல் என்றோ, இயற்கையின் செயல் என்றோ, விதியின் செயல் என்றோ, நம்மை மீறிய செயல் என்றோ எடுத்துக்கொள்ள வேண்டும். நம்மை மீறிய செயலுக்கு நாம் பொறுப்பாக முடியுமா? ஆகவே நடந்து முடிந்த அனைத்தையும் happening ஆக எடுத்துக் கொள்ள வேண்டும். நமது கவனம், செயல்படவேண்டிய செயலில்தான் இருக்க வேண்டுமே தவிர நடந்து முடிந்து போனவற்றில் இருக்கக்கூடாது...

... நாமாகச் செய்த செயல் (doing) கூட அந்த doing நடந்து முடிந்த பிறகு அது doing அல்ல. அதுவும் happening ஆக மாறிவிடுகிறது. நடந்து முடிந்தவை அனைத்தும் happening தான் – அது நாமாக செய்திருந்தாலும் சரி அல்லது நம்மை மீறி நடந்திருந்தாலும் சரி.

ஆன்மிகம் என்பது நமது மனதை நிர்வாகம் செய்வதற்காக அமைக்கப்பட்ட பாரம்பரியமான புராதனமான அணுகுமுறை. நாம் எப்படி புரிந்து கொள்ள வேண்டுமோ அப்படி புரிந்து கொள்வதற்குப் பெயர் ஞானம். நாம் புரிந்து கொண்டதால் ஏற்படும் விளைவுக்கு பெயர் முக்தி அல்லது விடுதலை.

ஞானம் என்பது அனுபவித்து அறியக் கூடிய ஒன்றல்ல. அது ஒரு புத்தி பூர்வமான புரிதல் மட்டுமே. Intellectual clarification மட்டுமே. ஆனால் விடுதலை என்பது – liberation என்பது ஒரு நிகழ்வு –

அனுபவப்பூர்வமான ஓர் உண்மை.

நமது மனோ இயக்கத்தின் உயிர்நாடி இந்த விடுதலைதான். விடுதலையுடன் இயங்கும் மனது தான் உயிருடன் இயங்கும் மனதாகும். விடுதலை பெறாத மனது வெறும் ஜடத் தன்மையுள்ள மனதே ஆகும்.

உயிர்த் தன்மை என்பது ஏதோ ஒரு நிலையினையோ, அனுபவத்தையோ தேக்கி வைப்பதன்று. எல்லா அனுபவங்களில் இருந்தும் விடுபட்டு எப்போதும் புதியதாக இருந்து கொண்டிருப்பது தான் அது.

அது நாம் முயன்று அடைய வேண்டிய ஒன்றல்ல. இயற்கையாகவே நம் மனது என்றென்றும் புதுமையாகவே இருந்துகொண்டிருக்கிறது. அதனுடைய அனுபவங்கள் யாவும் நிகழ்கணத்தில் மட்டுமே உள்ளது. நிகழ் காலம் என்பது தேங்கிக்கிடக்கும் ஒன்றல்ல. கணந்தோறும் புதுப்பொலிவோடு இயங்கும் ஒரு பிரவாகமே.

நமது மனம் நடந்து முடிந்தவற்றிலிருந்து ஒவ்வொரு கணத்திலும் விடுபட்டு இருப்பது தான் ஆரோக்கியமான மனதின் செயல்பாடு. அதன் ஆரோக்கியமான உயிரோட்டமான இயக்கமே பிரவாகமாகும்.

பிரவாகம் என்பதுதான் விடுதலை. அதுதான் முக்தியின் இயக்கம். அது இந்த முயற்சியின் விளைவாக அமைந்த இயக்கம் அன்று. இப்படியாக நிகழ்ந்துகொண்டிருக்கும் ஓர் இயற்கை இயக்கமே இந்த பிரவாகம்.

**அ**மெரிக்காவில் வசிக்கும் இந்திய பெண்மணி ஒருவர் தனது பிரச்சினை குறித்து நம்மிடம் ஆலோசனை கேட்டார். திருச்சி அன்பரிடம் பேசிய உரையாடலை அந்தப் பெண்மணிக்கு அனுப்பி வைத்தேன்.

"உங்கள் ஆலோசனை எனக்கு பயன் கொடுத்தது. உங்கள் ஆலோசனைப்படி எனது பெரும்பாலான கவனத்தை doing மீது செலுத்தி வருகிறேன். இதனால் எனது மன வேதனைகள் ஓரளவு குறைந்து விட்டன. ஆனால் எனது கவனத்தை எப்போதுமே doing மீது வைத்திருப்பது சற்று கடினமாக உள்ளது."

அது சம்பந்தமாக அவரிடம் பேசினேன்:

... எதையுமே நாம் வேலையாக எடுத்துச் செய்தால் அது சிரமமே. களைப்பையே அது ஏற்படுத்திவிடும். பழையன மறந்து விடுவதும் புதிய அனுபவங்கள் கணந்தோறும் புதிதுபுதிதாக ஏற்படுவதும் நம் மனதில் இயற்கையாகவே இருந்துவருகிறது. அதற்கு நாம் ஒத்துழைப்பு கொடுத்தால் மட்டுமே போதும்...

... பழையன கழிதலுக்குதான் சாஸ்திரங்கள் முக்கியத்துவம் கொடுத்துள்ளன. அதைத்தான் முக்தி, விடுதலை என உன்னதமான பெயரிட்டு அழைக்கின்றன. மன அனுபவங்களில் ஏற்படும் தேக்கங்கள்யாவும் மனதை முடமாக்கி விடுகின்றன. மன இயக்கம் எந்தக் கட்டுகளும் இல்லாமல் சுதந்திரமாக இயங்க வேண்டும். இதுதான் மன இயக்கத்தின் ஆரோக்கியமான நிலை.

நமக்கு ஏற்பட்ட சூழ்நிலைக்கு ஏற்றவாறு தான் நாம் செயல்பட்டாக வேண்டும். சூழ்நிலைக்கு சம்பந்தமில்லாத எதையும் நம்மால் செய்ய முடியாது. ஆனால் அந்த சூழ்நிலையானது நமது கைவசம் கிடையாது. அதில் 10% மட்டுமே நமது பங்காக உள்ளது. 90% அம்சம் நம்மை மீறிய ஒன்றாகவே உள்ளது.

நமக்காக உள்ள அந்த 10% அம்சத்தில் நாம் எப்படி செயல்பட வேண்டும்?

நம்முடைய புறச் செயல்களோடு சம்பந்தப்பட்ட அளவில் நம்முடைய செயல் அம்சம் 10% ஆகவும் நம்மை மீறிய நிகழ்வுகள் 90% ஆகவும் உள்ளது.

இவை அனைத்தும் நமது புறச்செயல்கள் சம்பந்தப்பட்டவை.

நம்முடைய அகச் செயல்பாடு எவ்வாறு அமைந்துள்ளது?

இங்கு நம்முடைய மனதில் ஏற்படும் அக அனுபவங்கள் தான் நம்முடைய அகச் செயல்பாடாக அமைந்துள்ளது.

மகிழ்வைத்தரும் சூழ்நிலையில் மகிழ்ச்சியான மன அனுபவமும் வருத்தமான சூழ்நிலையில் வருத்தமான அனுபவமும் நம்மை அறியாமல் ஏற்பட்டு விடுகிறது.

அவை ஏற்பட்ட பிறகுதான் அவை ஏற்பட்டதே நமக்குத் தெரிகிறது.

அப்படி ஏற்பட்ட அனுபவத்தில் நமது பங்கு என்ன? நாமாக செயல்படும் பங்கு என்ன?

நாமாக செயல்படும் அம்சம் 10% ஆகவும் நம்மை அறியாமல் செயல்படும் அம்சம் 90%

ஆகவும் உள்ளனவா?

இல்லை.

அங்கு நாமாக செயல்படும் அம்சம் என்று எதுவுமே கிடையாது.

அவை அனைத்தும் நம்மை அறியாமல் நம்மை மீறித்தான் செயல்படுகின்றன.

அவை நடந்து முடிந்த பிறகுதான்

– வெளிப்பட்டு முடிந்த பிறகுதான் அவை நடைபெற்றதே நமக்குத் தெரிகிறது.

நடந்து முடிந்தவற்றை நாம் என்ன செய்ய முடியும்?

நடந்து முடிந்த பிறகுதான் அதுபற்றி நாம் ஆய்வு செய்கிறோம் அல்லது அதை மாற்றியமைக்க போராடுகிறோம்.

புறச் செயல் சம்பந்தமாக நமக்கு பங்கு உள்ளது. பங்கு வெறும் 10% ஆக இருந்தால் கூட, அந்த 10% ஐ நாம் முழுமையாக பயன்படுத்திக்கொள்ள முடியும். அந்த 10% பங்களிப்பின் உதவியுடன் நாம் நமது புற வாழ்வில் நாம் பல வித சாதனைகளை செய்ய முடியும்.

ஒருவர் புதியதாக சோப்பு ஒன்றை தயாரிக்கிறார் என வைத்துக்கொள்வோம். அதன் தரத்தில் எந்தக் குறையும் கிடையாது. மார்க்கெட்டில் உள்ள தரமான சோப்புக்கு அது எந்த வகையிலும் குறைந்தது கிடையாது.

அவரது சோப்பு தரமான சோப்பு என்பதற்காக அனைவரும் அவரது சோப்பையே வாங்கி விடுவார்களா?

மார்க்கெட்டின் 90% அம்சம் அவருடைய கைகளில் கிடையாது. வெறும் 10% அம்சம் மட்டுமே அவரது கைகளில் உள்ளன.

அதை பயன்படுத்தி அவர் சிறுகச்சிறுக முயன்று விற்பனையில் முதலிடத்தை கூட பிடிக்க முடியும்.

ஆனால் அகத்தை பொறுத்த அளவில் நமக்கு 10% பங்கு கூட கிடையாது.

புறவுலக அம்சம் என்பது ஒரு தொடர் நிகழ்வாகும். அதனை நாம் மாற்றியமைத்துக் கொள்ளலாம்.

ஆனால் அக நிகழ்வுகள் அப்படி அன்று. அவை கணந்தோறும் புதியவை. கணந்தோறும் மறைந்து விடுபவை.

நம் மனதின் செயல்பாடு எவ்வாறு உள்ளது?

மனதின் உதவி இல்லாமல் நம்மால் புறச் செயலில் ஈடுபட முடியுமா?

புறத்தில் ஒரு செயலை செய்வதானாலும் மனதின் உதவி இல்லாமல் செய்ய முடியாது.

செயல்கள் அனைத்தையும் நாம் நம் மனதில் திட்டமிட்டு அதன்படி அதை செயல்படுத்தலாம்.

அதே போன்று நாம் நமது அகச் செயல்களை திட்டமிட முடியுமா?

அகச்செயல்கள் இயற்கையானவை; நம்மை மீறி செயல்படுபவை.

புறச் செயல்களைப் பொறுத்தவரையிலும் 90% நம்மை மீறியவையாதலால் அதனையும் நாம் நம்மை மீறிய ஒன்றாக மனப்பூர்வமாக அங்கீகரிக்க வேண்டும். நமக்கு கட்டுப்பட்ட 10% பங்கை மட்டும் மனப்பூர்வமாக செயல்படுத்த வேண்டும்.

அகச் செயல்பாடுகளை நாம் எவ்வாறு எடுத்துக் கொள்ள வேண்டும்?

நமது புறச் செயலில் ஒரு நெருக்கடி – தோல்வி– இழப்பு ஏற்படுவதாக வைத்துக்கொள்வோம்.

இதனால் நமது மனதில் ஒரு வேதனை உணர்வு ஏற்படுகிறது.

புறத்தில் உள்ள பிரச்சினை மன வேதனையாக அகத்தில் பிரதிபலிக்கின்றது.

புறப் பிரச்சினையையும் நாமாக உருவாக்கவில்லை. அக வேதனையையும் நாமாக உருவாக்கவில்லை.

ஆகவே அகம்–புறம் இரண்டையும் நம்மை மீறி நடந்தவையாகதான் நாம் எடுத்தாகவேண்டும்.

இருந்தாலும் கூட புறச்செயல்களை முயன்று சீரமைக்கும் 10% அம்சம் நம்மிடம் உள்ளதால் அதை நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ளலாம்.

அகத்தை பொறுத்த வரையிலும் அது 100% நம்மை மீறிய ஒன்று. ஆகவே அதனை இயற்கையின் செயலாகவோ அல்லது இறைவன் செயலாகவோ happening ஆக ஏற்றுக் கொள்ளவேண்டும்.

அப்படி நாம் அதனை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்ளும் நிலையில்,

முரண்பட்டு இயங்கும் நமது மனதினுள்ளும் முரண்படாத ஒரு முழுமைத் தன்மை மலர்வடைகின்றது.



**V.A.P. சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880



# கேள்வி ? பதில்...

## எனது புற முயற்சி தோல்வி அடையும்போது மிகவும் பாதிப்படைகிறேன். அது எதனால்?

**கேள்வி :** நான் பகவத் ஐயாவின் ஞான முகாமில் கலந்து கொண்டு இருக்கின்றேன். அகம் – புறம் நன்றாக புரிந்தது. புறத்தில் நான் புத்திபூர்வமாக ஒரு செயலைச் செய்ய வேண்டும் என்று முடிவெடுக்கிறேன். பிறகு நான் எடுத்த அந்த முடிவின் உறுதியை குலைக்கும்படி என் மனதில் பல விதமான எண்ணங்கள் தோன்றுகின்றன. அதனால் நான் எடுத்த முடிவில் உறுதியாக நின்று செயல்பட முடியாமல் குழப்பம் அடைகின்றேன். நான் எடுத்த முடிவில் உறுதியாக இருப்பதற்கு என்ன செய்யவேண்டும்?

புரிந்து கொண்ட பிறகு எனது புறச் செயலில் நான் தோல்வி அடைவதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. நான் மிகவும் பாதிப்படைகிறேன். பாதிப்படையாமல் எப்படி செயல்படவேண்டும்?

**பதில் :** மனோ இயக்கத்தில் அகம் – புறம் உங்களுக்கு நன்றாகப் புரிகிறது.

அகத்தில் நமக்கு எந்த வேலையும் இல்லை என்று முடித்துக் கொள்ள வேண்டும். அகத்தில் "நான்" என்பது கூட தோன்றி மறையும் ஓர் எண்ணம் என்ற புரிதலுக்கு வந்துவிட வேண்டும்.

புறத்தில் நாம் அறிவுடன் தான் செயல்பட வேண்டும். புத்தி பூர்வமாக நீங்கள் ஒரு முடிவை எடுத்து செயல்பட்டுதான் உங்கள் வாழ்வை உயர்த்திக்கொள்ள முடியும். நீங்கள் புத்திபூர்வமான முடிவை எடுத்த பிறகும் கூட உங்கள் மனம் பல விதமான ஆலோசனைகளை வழங்கலாம். அதை அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற எந்த அவசியமும் இல்லை. மனம் எப்போதும் வழக்கம்போல் பலவகையான யோசனைகளை காட்டிக் கொண்டுதான் இருக்கும். நாம் எடுத்த முடிவைக் காட்டிலும் உயர்ந்த யோசனைகளை கூட காட்டலாம், நான் எடுத்த முடிவு தவறு என்று கூடக் கூறலாம்.

மனம் கூறும் யோசனைகள் அத்தனையும் நாம் ஒன்றன் பின் ஒன்றாக எடுத்து செயல்படத் தொடங்கினால் குழப்பம் மட்டுமே மிஞ்சும். நம்மால் ஒன்றைக் கூட முழுமையாக செயல்படுத்த முடியாது. காரணம் மனம் என்பது கணத்திற்கு கணம் மாறிக் கொண்டே இருக்கக் கூடியது. அதுதான் அதன் இயல்பு.

மனம் கூறும் யோசனைகள் அனைத்தையும் புறந்தள்ளிவிட்டு புத்தி பூர்வமாக நாம் எடுத்த முடிவில் நிலைத்து நிற்க வேண்டும். அது சம்பந்தமாக நாம் மேற்கொள்ள வேண்டிய முயற்சிகளை முறைப்படுத்திக் கொள்ள வேண்டும். நாம் எடுத்த முடிவை செயல்படுத்துவதற்கு நமது நல்ல நண்பர்களின் ஆலோசனைகளையும் எடுத்துக்கொள்ளலாம். நாம் எடுத்த முடிவு சம்பந்தமாக நாம் மாற்றிக் கொள்ள வேண்டிய செயல்பாடுகள் ஏதாவது இருந்தால் அதில் கொஞ்சம் கூடுதல் கவனத்தை செலுத்தி மாற்றிக்கொள்ள வேண்டும். இப்படி நாம் எடுத்த முடிவில் தொடர்ந்து செயல்படுகின்ற பொழுது சிறிது சிறிதாக அந்த செயலில் ஆர்வமும் நாம் எடுத்த முடிவில் உறுதியும் ஏற்பட்டு கொண்டே வரும். அந்த முடிவு சம்பந்தமான விஷயத்தில் வளர்ச்சி ஏற்படுவதை கொஞ்ச காலத்தில் உங்களால் உணர முடியும்.

உதாரணமாக நமது இல்லத்திலிருந்து சென்னை செல்வதாக திட்டமிட்டு இருக்கிறோம் என்று வைத்துக் கொள்வோம். நாம் சென்றடைய வேண்டிய இலக்கு சென்னை. நமது இலக்கை நோக்கி நாம் பயணத்தை மேற்கொள்ள வேண்டியது தான் முக்கியம். நாம் சென்னை செல்லும் வழித்தடங்களில் போக்குவரத்து நெருக்கடி மிகுந்து இருக்கலாம், சாலைகள் பழுதடைந்து கூட இருக்கலாம், மாற்றுப்பாதையில் செல்ல வேண்டிய அவசியம் கூட ஏற்படலாம். இந்த நிலையில் நாம் செல்ல வேண்டிய இலக்கு பற்றி சிந்தித்துக்கொண்டிருப்பதை விட நாம் எதிர் கொண்டுள்ள சாலையில் எப்படி கவனமாக நமது பயணம் மேற்கொள்ள வேண்டும் என்பதே மிகவும் முக்கியம். இப்படி மட்டுமே நம் இலக்கை நோக்கி நாம் பயணத்தை மேற்கொள்ள வேண்டும்.

நாம் அனைவரும் GPRS என்ற கூகுள் மேப்பை பயன்படுத்தி வருகிறோம். அந்த கருவியைப் பொருத்திக் கொண்டு நாம் வாகனம் ஓட்டுவதாக

வைத்துக்கொள்வோம்.

அந்தக் கருவி நாம் போக வேண்டிய இடத்திற்கான வழித்தடத்தை காட்டும்.

அது இடது பக்கம் திரும்ப வேண்டும் என்று வழிகாட்டுவதை நாம் சரியாக கவனிக்காமல் நேராகச் சென்று விடுகிறோம் என்று வைத்துக்கொள்வோம். அது நம்மை குற்றம் சொல்லாமல் நாம் இப்பொழுது இருக்கும் இடத்திலிருந்து நாம் செல்லவேண்டிய இடத்திற்கான புதிய வழித் தடத்தை காட்டும். நம்மை எந்த குறையும் சொல்லாது . அடுத்ததாக நாம் மேற்கொள்ள வேண்டிய சரியான பாதையை மட்டுமே காட்டும்.

இந்த கருவியைப் போல நாமும் நம் அறிவை பயன்படுத்திக் கொள்ள வேண்டும். முடிந்துபோன நிகழ்வை ஆராய்ச்சி செய்யாமல் அடுத்து நாம் என்ன செய்ய வேண்டும் என்பதில் கவனமாக இருப்பதின் மூலம் எப்படியும் நாம் சென்றடைய வேண்டிய இடத்தை கொஞ்சம் காலதாமதமாக கூட சென்று அடைந்து விடுவோம். இதுபோல் நாம் எடுத்த முயற்சியில் உறுதியாக இருக்கும் பொழுது நிச்சயமாக நமது இலக்கை அடைய முடியும்.

புறத்தில் நமக்கு வெற்றிதான் இலக்கு. ஆனால் நமது முயற்சிகள் அனைத்தும் வெற்றி அடையும் என்று உறுதியாக கூறமுடியாது. தோல்வியும் கூட ஏற்படலாம். புறம் என்பது நம்மை மட்டும் சார்ந்தது அல்ல. நம்மை சுற்றியுள்ள அனைவரையும் சார்ந்தது. நமக்கு ஏற்படும் தோல்வியிலிருந்து அனுபவப் பாடம் கற்றுக் கொள்ள வேண்டும். முடிந்துபோன தோல்வியை அத்துடன் முடித்துக் கொண்டு அடுத்ததாக நாம் செய்யவிருக்கும் புதிய முயற்சிக்கு இந்த தோல்வியில் ஏற்பட்ட அனுபவத்தை பாடமாக பயன்படுத்தி கொண்டு நாம் செயல்பட வேண்டும்.

இப்படி மட்டுமே நாம் புறத்தில் அடுத்த அடுத்த கட்டமாக வளர்ச்சியை அடைய முடியும்.

பகவத் அய்யாவின் மனதைப் பற்றிய புதிய அணுகுமுறை தெரியாதவரை நாம் நமக்காக தான் அனைத்து செயல்களையும் செய்துகொண்டு இருந்தோம்.

நமக்காகத்தான் செயல், செயலுக்காக நாம் இல்லை என்ற தன்மைதான் இன்றுவரை சமுதாயத்தில் பெரும்பாலும் இருந்து வருகிறது. அதாவது நம்மை முதன்மை நிலையில் நிறுத்திக்கொண்டு செயலை இரண்டாம்பட்சமாக செய்வது என்ற நிலைப்பாடே இருந்துவருகிறது.

இப்படி செயல்படுவது கூட செயலுக்கான முழுமையான நிலைப்பாடாக இருக்காது. நமக்காக செயல் செய்து கொள்கின்றோம் என்ற அகங்காரத் தன்மையே மேலோங்கி நிற்கும்.

பகவத் ஐயாவின் இந்த அணுகுமுறையைப் புரிந்து கொண்ட பிறகு, செயலுக்கு முதன்மையான முக்கியத்துவம் அளித்து, அந்த செயலை செய்வதற்காக நம்மை பயன்படுத்திக் கொள்ளும்போது நமது "நான்" தன்மை இரண்டாம் பட்சமான தன்மையை அடைகிறது. நம்மை முன் நிறுத்தாது செயலுக்காக நம்மை பயன்படுத்திக் கொள்ளும் தன்மைக்கு வந்து விடுகின்றோம். இப்படி செயல்படும்போது செயல் தன்னுடைய முழுமைத் தன்மையை அடைகிறது.

நம் மீது நாம் பற்று வைப்பது தான் நாம் சந்திக்கும் எல்லா பிரச்சனைகளுக்கும் காரணம். நாம் செய்யும் செயலின் மீது பற்று வைப்பதுதான் சரியான அணுகுமுறை.

இப்படி செயல்படும்போதுதான் செயல் முக்கியத்துவம் பெறும். நமது முயற்சியில் தோல்வியே ஏற்பட்டாலும் கூட அடுத்ததாக நாம் செய்யவேண்டிய செயல் பக்கம் திரும்புவோம்.

"நான்" தன்மை முக்கியத்துவம் அடையும்போது தோல்விகள் அனைத்தும் நம்மை பாதிப்படையவே செய்யும்.

"நான்" தன்மைக்கு முக்கியத்துவம் அளித்து செய்யப்படும் செயல்கள் அதற்கான அங்கீகாரத்தை எதிர்பார்த்து கொண்டேதான் இருக்கும். அங்கு செயலுக்கான முக்கியத்துவத்தை விட "நான்" என்ற தன்மையே முக்கியத்துவம் பெறும். அதைத்தான் நான் என்ற அகந்தை என்று கூறுகின்றோம்.

புறச் செயல்கள் வெற்றி பெறுவதற்காக நமது நான் தன்மையை பயன்படுத்திக் கொள்ளலாம். இப்படி செயல்படும்போது மட்டுமே செயல்கள் சிறப்படையும். நான் தன்மையும் எழுச்சி அடையாது.

இந்த புரிதலினால் மட்டும்தான் நமது நான் தன்மையை இழந்து நம்மால் செயல் செய்யவே முடியும்.

இதுவே தன்னை இழந்து நலம் செய்யும் நிஷ்காமிய கர்மாவாகும்.

# விழிப்புணர்வு – அக விழிப்பு
## Awareness - Awakening

விழிப்புணர்வு என்ற வார்த்தை ஆன்மிகத்தில் பரவலாக பேசப்பட்டு வருகிறது. விழிப்புணர்வு என்றால் என்ன?

இது ஆங்கிலத்தில் Awareness என்று குறிப்பிடுகிறோம்.

பலரும் மனதில் விழிப்புணர்வோடு இருக்க வேண்டும் என்று, அதாவது தேவையற்ற எண்ணங்கள் எழாமல் விழிப்புணர்வோடு இருக்க வேண்டும் என்று முயற்சி செய்கிறார்கள்.

உண்மையில் நாம் அடைய வேண்டியது விழிப்புணர்வு அல்ல; awareness அல்ல.

உண்மையில் நாம் அடைய வேண்டியது அக விழிப்பு மட்டுமே; இதை ஆங்கிலத்தில் awakening என்று குறிப்பிடுகிறோம்.

ஆன்மிகத்தில் மிக உயர்வாகப் பேசப்படுவது விடுதலை. முக்தி, மோட்சம் என்று குறிப்பிடப்படுவதும் இதைத்தான்.

தூக்கத்திலிருந்து விழித்துக் கொள்வதைப் போல மனதின் மயக்கத்திலிருந்து அதாவது மனதின் மாயையிலிருந்து விழித்துக் கொள்வதுதான் இந்த விழிப்பு – awakening.

விழிப்புணர்வோடு இருப்பது என்றால் தெடர்ந்து மனதில் கவனத்தோடு இருப்பதாகும். அதாவது நமக்கு மனதில் தொடர்ந்து வேலை உள்ளது என்று பொருள்.

விழிப்பு என்றால் அங்கு வேலை இல்லை என்று முடித்துக் கொள்வது; விழித்துக் கொள்வது.

நமது கவனம் புற வேலைக்குத்தான் பயன்பட வேண்டும். மன உணர்வுகளையும் எண்ணங்களையும் நிர்வாகம் செய்ய அல்ல என்று புரிந்து கொள்ள வேண்டும்.

நம் கட்டுப்பாட்டில் இல்லாத பகுதியில் நமது கவனம் இருப்பதுதான் நமக்கு அனைத்து பிரச்சினைகளையும் கொண்டு வருகிறது.

நமது கவனத்திற்கான வேலை நமது அகம் அல்ல; நமது புறம் மட்டுமே.

அக விழிப்புணர்வு awareness என்பது அகத்தில் கவனமாக இருப்பதைக் குறிக்கிறது.

அக விழிப்பு; awakening என்பது மனததை நிர்வகிக்கும் வேலையிலிருந்து விடுபடுவதை குறிக்கிறது.

இரண்டுக்கும் உள்ள வித்தியாசத்தைப் புரிந்து கொள்ள வேண்டும்.

இரண்டும் எதிர் எதிர் எல்லையைக் குறிக்கிறது. இரண்டுக்கும் 100% வித்தியாசம் உள்ளது.

அதாவது விழிப்புணர்வு என்பது மனோலயத்தையும் விழிப்பு என்பது மனோலயத்தில் இருந்து விடுபட்ட மனோலய நாசத்தையும் குறிக்கிறது.

இந்த அக விழிப்பை ஏற்படுத்தக்கூடியது புரிதலைதான் நாம் ஞானம் என்று குறிப்பிடுகிறோம்.

நாம் அனைவரும் மனதின் இயக்கத்தை நன்றாகப் புரிந்துகொண்டு விழிப்பு அடைந்து வாழ்வோமாக.

**K.S. ஜீவமணி,** ஆசிரியர், பகவத் பாதை
**9789165555**

கோடையில் இயற்கை சூழல் மிகுந்த **ஏற்காடு மலைப் பிரதேசத்தில் 4 நாள்**

# சிறப்பு ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

இடம் : House of Peace (Glass House) அமைதி இல்லம், ஏற்காடு.
நாள் : 30-4-2020 வியாழக்கிழமை மாலை 4 மணி முதல்
3-5-2020 ஞாயிறு மாலை 3.00 மணி வரை

- இது கோடை காலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்கு பெறலாம்.
- ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் 10 மட்டும் உள்ளதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.
- உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு **ரூ. 5000/-** மட்டுமே.
- 90 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் மார்ச் 31ம் தேதிக்குள் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம்.

**முன்பதிவு செய்யும் வழிகள் :**

**M.O, D.D. (or) Cheque :** வரைவோலை அனுப்புபவர்கள் :
A/c. Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**Direct Payment :** நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் :
Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC : HDFC 0001590 என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

**ஸ்ரீ பகவத் மிஷன்**
31, இராமலிங்கசாமி தெரு,
அம்மாப்பேட்டை, சேலம்-3.
கைப்பேசி : **79041 18421, 99942 05880, 97891 65555**

# சென்னை ஸ்ரீபகவத் பவன்

அய்யா மீது தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

சென்னையில் ஸ்ரீ பகவத் பவன் அமைப்பதற்காக நாம் ஏற்கெனவே முயற்சி எடுத்திருந்தோம். அது சில தவிர்க்க முடியாத காரணங்களால் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது.

தற்போது ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி மீண்டும் அதற்கான ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

சென்னையில் அமைய விருக்கின்ற ஸ்ரீபகவத் பவன் நமது அய்யாவின் இல்லமாகவும் நாம் அனைவரும் ஐயாவை சந்தித்து தங்கி உரையாடிச் செல்ல ஏற்றவகையில் நமக்கான பகவத் பவன் இல்லமாகவும் அமையவிருக்கிறது.

இதனை நாம் கட்டுவதற்குப் பதிலாக புதியதாக கட்டி முடிக்கப்பட்ட இல்லமாக வாங்க முடிவெடுத்து இருக்கிறோம்.

இதனை வாங்குவதற்கு நமக்குத் தேவைப்படும் தொகையை நிறுவனர் (Founder) நன்கொடையின் மூலம் பெறலாம் என முடிவெடுத்துள்ளோம்.

முன்பே சென்னை ஸ்ரீபகவத் பவன் கட்டிடத்திற்கான நிதி வழங்கியவர்களின் நிதியும் இந்த வகைக்கு பயன்படுத்தப்படும்.

ஏற்கெனவே நிதி வழங்கிய இவர்களுக்கு நாம் அனைவரின் சார்பாக உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

நமது சென்னை ஸ்ரீபகவத் பவன் இல்லத்தில் பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவரின் பங்களிப்பும் இருக்க வேண்டும் என்பதே முக்கியம்.

பங்களிப்புத் தொகை எவ்வளவு என்பது முக்கியமல்ல.

பங்களிக்கும் உள்ளமே முக்கியம்.

எனவே தங்களால் இயன்றதை வழங்கும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். உள்ளன்போடு தாங்கள் அளிக்கும் பங்களிப்பை மனமுவந்து பெற்றுக் கொள்கிறோம்.

வாருங்கள் ஒன்றிணைவோம். நம் அனைவரின் ஒருங்கிணைந்த கூட்டு முயற்சியால் நமக்கான இல்லத்தை உருவாக்குவோம்.

# நிகழ்ச்சி நிழல்கள்



ஐயாவுடன் திருச்செங்கோடு
திரு. பாஸ்கர் மற்றும் அவரது நண்பர்கள்.





அக்கு ஹீலர் அன்பர்கள் ஐயாவை சந்தித்து உரையாடியபோது.



Hr பாஸ்கர் அவர்கள் நடத்திய மகா சிவராத்திரி நிகழ்ச்சியில்.








ஸ்ரீவில்லிபுத்தூரில் நடைபெற்ற ஞான முகாமில் கலந்து கொண்டவர்கள்.

# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

நடைமுறை வாழ்க்கைக்கு பயன்படும் ஆன்மிகமே சரியான ஆன்மிகம். ஞானமும் முக்தியும் அடைவதற்கு மிகவும் அரிதாக கருதும் நிலையில் திறந்த மனதுடன் நமது முகாம்களில் கலந்து கொள்பவர்கள் அனைவருமே ஞானமடையும் அளவிற்கு எளிதாக்கி விட்டார் ஸ்ரீபகவத் ஐயா அவர்கள்.

அந்தவகையில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானமோ எளிதாகவும் இருக்கிறது, ஞானத்தால் விளைந்த விடுதலையோ விஸ்வரூப பலனாக துன்பத்திலிருந்தும் துயரத்தில் இருந்தும் விடுபட்டு வாழ்வில் சந்திக்கும் எல்லா பிரச்சினைகளையும் தீரத்துடன் எதிர் கொள்ளும் வல்லமையையும் புரிந்து கொள்ளும் அனைவருக்கும் வழங்குகிறது.

ஆதலால் இதனை உலக மக்கள் அனைவருக்கும் கொண்டு செல்ல வேண்டும் என்பதே நமது பகவத் பாதையின் நோக்கம்.

அந்த வகையில் ஸ்ரீவில்லிபுத்தூரில் பிப்ரவரி 16ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை ஒரு நாள் ஞான முகாம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இதனை திரு. VAP சரவணன் அவர்களும் நானும் நடத்தினோம்.

ஞான முகாம் நடைபெற்ற இடத்தின் கொள்ளளவையும் மீறி நூற்றுக்கும் மேற்பட்ட அன்பர்கள் கலந்து கொண்டு பயனடைந்தனர். பலரும் பயன் பெற வேண்டும் என்ற உயர்ந்த நோக்கில் இலவசமாக ஏற்பாடு செய்திருந்த ஹோட்டல் கோல்டன் ராயல் நிர்வாகிகளாகிய Dr.P.வெண் குமார், Dr.கண்ணன் திரு.சக்தி மற்றும் அனைவருக்கும் பாராட்டுகளை தெரிவித்துக் கொள்கிறோம்.

இதனைத் தொடர்ந்து வருகின்ற ஏப்ரல் மாதம் ஐந்தாம் தேதி ஞாயிற்றுக்கிழமை சென்னையில் ஒரு நாள் ஞான முகாம் நடைபெற உள்ளது.

மேலும் நாம் வருடத்தில் ஒரு முறை கோடையில் நடத்தும் ஏற்காடு ஞான முகாம் ஏப்ரல் 30ஆம் தேதி முதல் மே 3ஆம் தேதி வரை நடைபெற உள்ளது. இது சுற்றுலா தலமாக இருப்பதால் குடும்பத்துடன் கலந்து கொண்டு பயன்பெறலாம். எனவே வாய்ப்புள்ள அனைவரும் கலந்துகொண்டு

## பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்ப வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் "பகவத் பாதை" தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

| | | |
|---|---|---|
| ஓர் ஆண்டு சந்தா | - | ரூ. 100/- |
| ஐந்தாண்டு சந்தா | - | ரூ. 500/- |
| ஆயுள் சந்தா | - | ரூ. 1000/- |

சந்தாத் தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Checque மூலம் அனுப்பலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank - Sri Bagavath Mission A/o. No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம். Bank A/c. ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 9262061838 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.



# ஜென் கதை

## "கைவசம் இருக்கும் பொக்கிஷம்"



இளைஞன் ஒருவன் தான் வாழ்வில் முன்னேற்றம் அடையாமைக்கும் தான் எதிர்கொள்ளும் பிரச்சினைக்கும் தன்னுடைய முன் வினையான கர்மாவே காரணம் என்பதில் தீர்மானமாக இருந்து வந்தான். இதற்காக அவன் சந்தித்த பல ஜோதிடர்களும்கூட கர்ம வினைகளின் பாதிப்பினால்தான் இவ்வாறு நிகழ்வதாக கூறி அதற்கான பரிகாரங்களைச் செய்யச் சொன்னார்கள்.

பரிகாரங்கள் பல செய்த போதும் அவனுடைய பிரச்சினைக்கு தீர்வு கிடைக்கவில்லை.

அவன் இந்த கர்மாவின் கோரப்பிடியில் இருந்து எப்போது விடுபடுவோம் என்று ஏங்கித் தவித்தான்.

மனம் சோர்ந்த நிலையில், ஓர் ஞானியைச் சந்தித்து ஏதாவது நல்ல வழிமுறையை கூறும்படி கேட்டான்.

ஞானி, "கொஞ்ச நாட்கள் என்னுடன் தங்கி செல்" என்றார்.

இளைஞனும் அவருடன் தங்கி கர்மாவைப் பற்றி பல கேள்விகளைக் கேட்ட வண்ணம் இருந்தான்.

ஞானியும் அவனுக்கு புரியும் படி சஞ்சித கர்மா, பிராரப்த கர்மா, ஆகாமிய கர்மா என மூன்று வகையான கர்மாகளைப் பற்றி விளக்கி "நம் கைவசம் இருப்பது ஆகாமிய கர்மாவான நமது செயல் மட்டுமே. ஆதலால் நீயாக செய்யும் செயலை நல்ல செயலாக செய். அது ஒன்றே தீர்வு" என்றார்.

"எனது மோசமான கர்மாவினால் எனக்கு ஏற்படும் மோசமான சூழ்நிலையை எதிர்கொள்ளும்போது நான் மிகவும் பாதிப்படைகிறேன். அதிலிருந்து விடுபடுவது எப்படி? எனது கர்மாவை மாற்றுவது எப்படி?" என்றான் இளைஞன்.

ஞானி, "உன்னுடைய முன் வினை கர்மா எப்படி பட்டது என்பது உனக்குத் தெரியுமா? அதன் விளைவு எப்படி ஏற்படும் என்று தெரியுமா?" என்று கேட்டார்.

"எதுவும் தெரியாது சுவாமி" என்றான்.

"உன் கர்மாவை பற்றி எனக்கு எதுவும் தெரியாதபோது அதை எப்படி மாற்றுவது? நாம் என்ன கர்மா செய்தோம் என்பது நமக்குத் தெரியாது. முடிந்த கர்மாவை நாம் ஒன்றும் செய்யவும் முடியாது. முடிந்துபோன கர்மாவிற்கு இவ்வளவு முக்கியத்துவம் தருவதை விட இப்பொழுது நம் கைவசம் இருக்கும் பொக்கிஷமான நமது செயலை நல்ல செயலாக செய்வது மட்டுமே நமக்கு வளர்ச்சியையும் நலனையும் ஏற்படுத்தும்" என்றார்.

"சுவாமி சற்று புரியும்படி விளக்குங்கள்" என்றான்.

ஞானி இளைஞனை சாக்கடையிலிருந்து தண்ணீரை எடுத்து ஓர் அகன்ற பெரிய பாத்திரத்தில் முழுவதும் நிரப்ப சொன்னார்.

இளைஞனும் மிகுந்த அருவருப்புடன் சாக்கடை நீரை அகன்ற பாத்திரத்தில் நிறைத்தான்.

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 | Postal Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of publication : First Week of Every Month | Posted at Salem HOP 636001. On 10th of every month.
Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India. Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555

"இந்த சாக்கடைத் தண்ணீரை நல்ல தண்ணீராக மாற்றுவதற்கு என்ன செய்யவேண்டும்?" என்றார் ஞானி .

"என்ன செய்வது என்று தெரியவில்லை சுவாமி" என்று புரியாமல் குழம்பினான் இளைஞன்.

"தினமும் இரண்டு குவளை வீதம் தண்ணீரை இந்த பாத்திரத்தில் நிரப்பி வா பிறகு உனக்கு தானாகவே புரிந்துவிடும்" என்றார்.

இப்படியே ஒரு மாதம் ஓடியது.

இளைஞனும் ஒரு மாதத்துக்குள் அறுபது குவளை தண்ணீரை சாக்கடை பாத்திரத்தில் ஊற்றி வந்தான்.

சாக்கடை தண்ணீர் நிரம்பிய பாத்திரம் இப்பொழுது முழுவதும் நன்னீராக மாறியிருந்தது.

பாத்திரத்தை காட்டி குருநாதர் இளைஞனிடம் "என்ன புரிந்து கொண்டாய்?" என்றார்.

"தொடர்ந்து நல்ல தண்ணீர் ஊற்றும் பொழுது சாக்கடை நீர் நன்னீராக மாறிவிடுகிறது" என்றான்.

"அப்படித்தானப்பா உனது கர்மாவும் செயல்படுகிறது" என்றார் ஞானி.

"கொஞ்சம் விளக்கமாக கூறுங்கள் சுவாமி" என்றான்.

"உன்னுடைய பழைய பூர்வஜென்ம கர்மாக்கள்தாம் அகன்ற பாத்திரத்தில் இருக்கும் சாக்கடை நீர். நீ தினமும் இரண்டு குவளையில் நல்ல தண்ணீரை சாக்கடை நீர் நிறம்பிய பாத்திரத்தில் ஊற்றுவது என்பதுதான் நீயாக மனம் உகந்து செய்யும் ஆகாமிய கர்மா. உனக்கு ஒரு மோசமான சூழ்நிலை ஏற்படும்போது கூட உனது செயல் நல்ல செயலாக இருக்கும்பட்சத்தில் அதன் விளைவு எப்படி நீ பாத்திரத்தில் ஊற்றிய நல்ல நீர் ஒரு குறிப்பிட்ட காலத்தில் சாக்கடைத் தண்ணீரை நன்னீராக மாறியதோ அதுபோல் உனக்கு ஏற்படும் மோசமான சூழ்நிலையிலும் கூட உனது நல்ல செயல்கள் உன் மோசமான கர்மாவின் தாக்கத்திலிருந்து உன்னை காக்கும்." என்றார் ஞானி.

இவ்வளவு காலமாக அவனுள் தேங்கியிருந்த சாக்கடை நீரின் தன்மை மாறத்தொடங்கியது. அவனுள் அக இருள் நீங்கி தன் கைவசம் இருக்கும் பொக்கிஷமான ஆகாமிய கர்மா என்ற ஒளி பிரகாசமடைய தொடங்கியது.